29th April 1960]

MR. SPEAKER: point of order is over-ruled.

SRI K. VINAYAKAM: Still . . .

MR. SPEAKER: The hon. Member cannot say 'still' after I have over-ruled the point of order.

*Multipurpose food for school children*

* 876 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state whether any scheme has been evolved to introduce multipurpose food in the educational institutions in the midday meals to the children?

THE HON. SRI C. SUBRAMANIAM: The matter is under consideration.

SRI N. K. PALANISAMI: ஸார், இப்போது கொடுக்கப்படும் மத்தியான உணவுக்கு சர்க்காரால் கொடுக்கப்படும் ஆறு நயா பைசாவும், பொது மக்களிடமிருந்து கிடைக்கும் நான்கு நயா பைசாவும் சேர்த்து எடுத்துக்கொள்ளப்படுவதாக தெரிகிறது. இம்மாதிரியான திட்டம் எல்லாப் பள்ளிக்கூடங்களுக்கு வந்தால் அரசாங்கம் அதிகப்படியான அளவில் உதவி செய்ய முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதற்குத்தான் மல்டி பர்பஸ் உணவு கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. எல்லா பள்ளிகளுக்குமே இலவசமாகக் கொடுக்க வேண்டும் என்பது தான் அரசாங்கத்தின் நோக்கம்.

SRI A. VEDARATHNAM: இந்த மல்டி பர்பஸ் உணவு கொடுப்பதற்காக எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் என்ன? இதைக்கொண்டுவருவதற்கு இன்னும் எவ்வளவு காலமாகும்? இதற்கான உற்பத்தி நிலையம் இப்போது எந்த நிலையில் இருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதற்கான இயந்திரங்கம் எல்லாம் வர வேண்டியிருக்கிறது. சீக்கிரத்திலேயே வந்துவிடும் என்று எதிர்பார்க்கிறேன்.

SRI N. K. PALANISAMI: இந்த மாதத்தில் ஆயிரம் பள்ளிகளுக்கு மத்தியான உணவு கொடுத்து இருக்கிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் நடைமுறையில் ஒரு பள்ளிக்கூடத்திற்குகூட ஒழுங்காகக் கொடுப்பதில்லை. இம்மாதிரியான கோளாறுகள் இருப்பதால் இதையும் எப்படி சரியாக நடத்தப் போகிறார்கள் என்று தெரியவில்லை. இதற்கு அரசாங்கம் என்ன பரிகாரம் எடுத்துக் கொள்ளும் என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இதிலுள்ள கேள்விக்கும் கனம் அங்கத்தினர் அவர்கள் கேட்பதற்கும் சம்பந்தமில்லை.

[29th April 1960

*The post of the Professor of Urdu in the Government Arts College, Madras*

* 877 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether it is a fact that the post of Professor of Urdu is kept vacant in the Government Arts College, Madras, for the last two years; and

(*b*) if so, the reason therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) The post of Lecturer in Urdu, Government Arts College, Madras, has been vacant from 11th August 1958.

(*b*) It was considered not desirable to transfer officers in the middle of the academic year 1958-59. Subsequently, it was found that the strength in Part III-Urdu of the B.A. degree classes was very low and it was not therefore considered necessary to fill up the post.

SRI A. A. RASHEED: Is it a fact that the vacancy has arisen because of the transfer of the Professor-Principal from the College? The Principal was Professor of Urdu also.

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, that is the reason.

SRI A. VEDARATHNAM: இந்தக் கல்லூரியில் உருது படிக்கின்ற மாணவர்கள் எத்தனை பேர்கள்? குறைந்த பட்சம் இத்தனை மாணவர்கள் இருந்தால் தான் உருது மொழிக்கு என்றோ அல்லது வேறு ஒரு தனி மொழிக்கென்றோ தனியாக ஆசிரியர்கள் நியமிக்கப்படுவார்களா என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: போன ஆண்டு அதாவது 1959-60-ல் உருது படிக்கின்ற மாணவர்கள் பி. எ. வகுப்பில் ஒருவரும் இல்லை. இந்த வருடத்தில் ஒருவர் சேர்ந்திருக்கிறார். ஆகவே இதற்கு என்ன செய்வது என்று பரிசீலனை செய்து கொண்டிருக்கிறோம்.

SRI A. A. RASHEED: Is it not a fact that the Professor of Urdu was teaching not only B.A. classes but also Pre-University classes and if so, will the Government thing of appointing a Urudu Professor or retransfering the Principal who was Professor of Urdu also.

THE HON. SRI C. SUBRAMANIAM: பிரின்ஸ்பால் விஷயம் வேறு. பிரின்ஸ்பால் எந்த இடத்திற்கு மாற்றப்பட வேண்டுமோ அந்த இடத்திற்கு மாற்றப்பட்டிருக்கிறார்கள். அதனால் இங்குள்ள காரியங்கள் ஒன்றும் பாதிக்காது. மேலும் இங்கு லெக்சரர் ப்ரியூனிவர்சிட்டிக்கு இருக்கிறார். அவரைக்கொண்டு இந்த வகுப்பிலுள்ளவர்களுக்கு வகுப்பு நடத்துவதற்கும் அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது.